(2) THE MADRAS HILL STATIONS (PRESERVATION OF TREES) AMENDMENT BILL, 1961 (L.A. BILL No. 53 OF 1961).

* THE HON. SRI M. BHAKTAVATSALAM: Mr. Deputy Speaker, Sir, I beg to introduce the Madras Hill Stations (Preservation of Trees) Amendment Bill[a] 1961 and move—

"That the Bill be taken into consideration."

Sir, the existing provisions of the Madras Hill Stations (Preservation of Trees) Act, 1955 (Madras Act XVII of 1955) do not permit the cutting or pruning of the branch of any tree for the purpose of providing proper shade for coffee or tea plantation. Under the provisions of the Act, the Collector may grant permission to cut trees only subject to the condition that provision is made for effective regeneration of an equal number of the same or other suitable species of trees.

It has been represented to Government that in the interests of improving coffee crops, permission should be granted for enabling the cutting down of silver oak trees in the coffee plantations in Yercaud panchayat area in Salem district and also to the lopping of branches of trees for providing proper shade for coffee or tea plantations. It is therefore proposed to amend the Act suitably.

It has also been represented to the Government that permission may be granted to clear lands by felling trees for growing coffee or tea, so that the development programme in regard to these crops approved by the Coffee or Tea Board may be completed. It is therefore considered that provision should be made in the Act to clear fell areas for purposes of planting coffee or tea.

With these words, I request the House to accept the motion.

DEPUTY SPEAKER: Motion moved—

"That the Madras Hill Stations (Preservation of Trees) Amendment Bill, 1961 (L.A. Bill No. 53 of 1961), be taken into consideration."

SRI J. MATHA GOWDER: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் இந்த திருத்த மசோதாவை ஆதரித்து, சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இது மலைப் பிராந்தியங்களிலே மரங்களை வெட்டுவது சம்மந்தமானது. ஒரிஜினல் சட்டத்திலே, காபித் தோட்டங்களிலே கூட மரங்களை வெட்டக் கூடாது என்று காணப்பட்டது. இதே மன்றத்திலே நாம் லாண்ட் இம்ப்ரூவ்மெண்ட் போர்ட் ஆக்ட் என்று ஒரு சட்டம் நிறைவேற்றி இருந்தோம். அந்த சட்டத்திலும், மரங்களை வெட்டுவது குறித்து செலக்ட் கமிட்டி சுற்றுப் பிரயாணம் செய்து, எல்லா மாவட்டங்களிலும் உள்ள தோட்டங்களைப் பார்த்து அங்கே உள்ள நிலைமையை அறிந்த பிறகு, காபி, டீ தோட்டங்களிலே, கிளைகளை வெட்டிக்கொள்ளலாம் என்று அந்த சட்டத்திலே இடம் அளிக்கப்பட்டது. இந்த மசோதாப்படி, காபி தோட்டங்கள் புதிதாக ஏற்படுத்த வகை செய்திருக்கிறோம். இதிலே, "ஏற்காடு"

a Published in the *Fort St. George Gazette*, dated 1st November 1961.

என்று மட்டும் கொடுக்கப்பட்டிருந்தது ; அதை மாற்றி அமைச்சர் திருத்தம் கொடுத்திருக்கிறார்கள், அது எல்லா ஹில் ஸ்டேஷன் களுக்கும் என்று. காபி, டீ இவைகள் உற்பத்தி செய்ய வேண்டு மானால், மரங்களை வெட்டிவிடவேண்டும். ஆனால், அப்படி வெட்டு விடுவதனால், மழை குறைந்துவிடுமோ என்று அங்கலாய்த்துக் கொள்ளலாம். ஆனால், இன்றைக்கு இருக்கும் நிலைமையைக் கவனிக்க வேண்டும். இரண்டு ஆண்டுகளாக இந்த மலைப் பிரதேசங் களெல்லாம், சர்க்காரால் பத்து ஆண்டு காலமாக வைத்து வளர்க் கப்பட்ட பாரஸ்ட் மரங்கள் வளர்ந்து பெரிது பெரிதாகி இருக் கின்றன என்பதைச் சொல்ல விரும்புகிறேன். இந்த நிலையில், மேலும் மலைப் பிரதேசங்களில் ஏழு மாதம் தொடர்ச்சியாக மழை பெய்து கொண்டிருக்கிறது. அதனால், காபி, டீ போன்ற செடி களுக்குப் பாதகம் ஏற்படுகிறது. அதிகமாக மழை இருந்தால் அது நல்லதல்ல. சாதாரணமாக நவம்பர் மாதத்தில் மேகங்கள் மூடிக் கொண்டு, 15 நாட்கள் வரை ஒரே மழையாக இருக்கிற காரணத் தினால், "பிளைடர் ப்ளிஸ்ட்" என்ற பூச்சி தேயிலைக்கு ஏற்படுகிறது. அதன் காரணமாக ப்ளான்டேஷனுக்கே சேதம் ஏற்படுகிறது. இதைப்பற்றி ஆறு, ஏழு ஆண்டுகளுக்கு முன் சர்க்காருக்குச் சொல்லப்பட்டது. நவம்பர் மாதத்தில் எல்லா சில்வர் ஓக் மரங் களையும் ப்ரூனிங் செய்து வெளிச்சத்தைக் காண்பித்தால்தான், செடிகளுக்கு நன்மை ஏற்படும். அப்படியே விட்டுவிட்டால், 9-a.m. இந்தப் பூச்சிதான் விழும். ஆனால், சட்டப் பிரகாரம் மரங்களை வெட்டக்கூடாது. ஆகவே, காபி, டீ தோட்டத்திற்கும் சேதம் ஏற்பட்டு, விளைபொருள்கள் குறைகின்றன என்ற கண்ணோட்டத் தோடு அமைச்சருக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. நீலகிரி, ஏற் காடுப் பகுதிகளிலே, இருக்கக்கூடியவர்கள் சர்க்காருக்கு முறை யிட்டதன் பேரில் இந்தச் சட்டம் இப்பொழுது திருத்தியமைக்கப் பட்டிருக்கிறது, புதியதாக டீ, காப்பித் தோட்டங்களை உற்பத்தி செய்யும் நிலையிலே, மழை ஒருக்கால் குறைந்துவிட்டால் அந்தப் பகுதியிலே உள்ளவர்களுக்குத் தண்ணீர் வசதி குறைந்துவிடுமோ என்று அஞ்சவேண்டிய அவசியமில்லை. நான் ஏற்கெனவே சொன்ன மாதிரி, சென்ற 7 மாத காலமாக, சென்ற ஏப்ரல் மாதத்திலிருந்து நவம்பர் மாதம் வரையிலும், அங்கே மழை தொடர்ச்சியாக பெய்து கொண்டிருக்கிறது. காப்பி, டீ பயிரிடுவதற்காக மரங்களை வெட்ட வேண்டுமென்று சொல்லும்பொழுது, அப்படி மரங்களை நீக்குவதற்கு இங்கே "கண்டிஷன்" விதிக்கப்பட்டிருக் கிறது. காப்பித் தோட்டம், டீ தோட்டம் உற்பத்தி செய்தால் அதற்காக அங்கேயுள்ள காடுகளை அழித்து விடலாம் என்று சட்டத்திலே இடமிருக்கிறபொழுது, பிளெயின்களில் உள்ளதுபோல் அங்கே செடிகளே இல்லாமல் போய் விடுமென்று யாரும் நினைக்கக்கூடாது. அங்குள்ள நிலைமை என்னவென்றால், காப்பி நாற்று நட்டவுடனேயே, அவற்றிற்கு நிழல் கொடுப்பதற்காக நிழல் தரும் மரங்களையும் உடனே நட்டுவிட வேண்டும். ஏனென்றால் காப்பிச் செடிகள் வளருவதற்கு முன் பாகவே, இந்த நிழல் மரங்கள் மேலே தொடர்ந்து படரவேண்டும். ஆகவே, காப்பிச் செடிகளுக்கு நிழல் கொடுப்பதற்கு அங்கேயுள்ள

15th November 1961] [Sri J. Matha Gowder]

தோட்டக்காரர்கள் பாடுபடுகிறார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். காப்பித் தோட்டத்திற்காக காடுகளை அழிப்பதிலே எந்த விதமான சேதமும் ஏற்பட்டுவிடாது. ஆனால், இன்றைக்கு, காப்பிப் பயிர் அவசியமா, உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு நெல் பயிர்தானே அதிகம் தேவை என்று சிலர் நினைக்கலாம். ஆனால், நெல் பயிர் எவ்வளவு அவசியமோ, அந்த அளவுக்கு காப்பியும், தேயிலையும் அவசியம். அந்நியச் செலாவணியைச் சம்பாதிப்பதற்கு இந்த இரண்டு பயிர்களும் தேவைப்படுகின்றன. இங்கே எப்படி பிளெயின்ஸில் உள்ளவர்கள் நெற்பயிர் பயிரிடுவதிலே எவ்வளவு அக்கரை கொண்டிருக்கிறார்களோ, அதே அளவுக்கு மலை வாசஸ்தலங்களில் உள்ளவர்கள், டீ, காப்பி பயிரிடுவதிலே அக்கரை கொண்டிருக்கிறார்கள். அங்கே என்னென்ன பயிர் செய்யக்கூடிய சாத்தியக் கூறுகள் இருக்கின்றன, அந்தப் பயிர்களுக்கு என்னென்ன தேவை என்பதைப்பற்றி அங்கேயுள்ள மக்களுக்கு அக்கரை இருக்கிறது. ஆகவே, அங்கேயுள்ளவர்களுக்கு, காப்பித் தோட்டம், டீ தோட்டங்கள் உற்பத்தி செய்வதற்கு தக்க முறையில் பாதுகாப்பு அளிக்கவேண்டும். இதைப் பற்றி நாங்கள் டிஸ்டிரிக்ட் டெவலப்மெண்ட் கவுன்ஸிலிலே விவாதித்து இருக்கிறோம். நீலகிரி மாவட்டத்திலே டீ, காப்பி பயிர் செய்பவர்களுக்கு ஒரு ஏக்கருக்கு சர்க்கார் ஆயிரம் ரூபாய் வரையிலும் கடன் வசதி கொடுக்கலாம் என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அந்த முறையிலே அவர்களுக்கு லட்சக்கணக்கான ரூபாய் கொடுத்திருக்கிறோம். உருளைக் கிழங்குப் பயிர் இந்த ஆண்டிலே எந்த நிலைமையிலிருக்கிறது என்பதைப்பற்றி சட்ட மன்றத்திலுள்ள எல்லா அங்கத்தினர்களுக்கும் தெரியும் என்று நம்புகிறேன். உருளைக்கிழங்கை நம்பி இருப்பவர்களின் கதி படுமோசமாக இருக்கிறது என்பதை நாம் புரிந்துக்கொள்ளவேண்டும். நில வரியை கட்டுபடுத்துவதற்குக்கூட முடியாத நிலையில், கடன் தவணைகளைக் கொடுக்க முடியாத நிலையில் இன்று அவர்கள் இருக்கிறார்கள். அவற்றைத் தள்ளிக் கொடுக்க வேண்டுமென்று முறையிட்டு இருக்கிறார்கள். ஆகவே, உருளைக்கிழங்கு பயிர் செய்யக்கூடிய இடங்களிலெல்லாம் காப்பி, தேயிலை பயிர்செய்துவிட்டால் அங்கு இருக்கக் கூடியவர்கள் ஓரளவு கஷ்ட நிலைமை இல்லாமல் வாழ்வதற்கு வழி செய்வதாகும். இந்த நிலைமையில் காப்பி, தேயிலை தோட்டங்கள் பயிர் செய்வதற்கு அங்கே உள்ள காடுகளில் உள்ள மரங்களை வெட்டுவதற்கு நாம் தாராள மனப்பான்மையுடன் நடந்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அதற்காக அங்கே உள்ள ரிஸர்வ் காடுகளை அழிக்கவேண்டுமென்று நான் சொல்லவில்லை. இங்கே உள்ளதுபோல் ஆயிரக்கணக்கான ஏக்கர்களை கொண்ட தனிப்பட்ட ரிஸர்வ் காடுகள் அங்கே இருப்பதாக நினைத்துவிடக் கூடாது. அங்கே உள்ள தரிசு நிலங்களில் ஒரு மரம், பத்து மரம், ஐம்பது மரம் என்று இருக்கிறது. அதைக் காடு என்று கருதக்கூடாது. முன்பு இருந்த சட்டத்தின் படி காப்பிச் செடி, தேயிலைச் செடி பயிர் இடுவதற்கு அங்கு உள்ள மரங்களை வெட்டக்கூடாது என்ற நிபந்தனையிருந்ததன் காரண

மாக அவைகளைப் பயிர் செய்ய முடியாத நிலைமை ஏற்பட்டு இப்பொழுது சர்க்கார் மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். ஆகவே, மலை வாசிகள் சார்பாக நான் இந்த மசோதாவை வரவேற்கிறேன்.

ஆனால், இதிலே ஓர் இரண்டு சிக்கல்கள் இருக்கின்றன என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். முன்பு இருந்த நிலைமைப்படி தங்கள் சொந்த உபயோகத்திற்காக வீட்டிற்கு முன்னால் உள்ள ஒரு மரத்தை வெட்ட வேண்டுமானால்கூட அதற்கு ஜில்லா பாரஸ்ட் ஆபீசர் உத்தரவு வேண்டியிருந்தது. இன்றைக்கு தாசில்தார் அளவிலே ஐந்து டன் மரம் வெட்டலாம் என்று இருக்கிறது. அப்படி ஐந்து டன் மரம் வெட்ட தாசில்தாரே உத்தரவு போடலாம் என்று சொன்னாலும்கூட அவர் ஜில்லா பாரஸ்ட் ஆபீஸரைக் கலந்து அவருடைய அனுமதியை பெற்ற பிறகுதான் அவர் உத்தரவு போடவேண்டும். இந்த முறையிலே ஏறத்தாழ ஆறுமாத காலம் ஆகிவிடுகிறது. கல்யாணச் செலவிற்காக ஒரு மரம் அல்லது இரண்டு மரங்கள் வெட்டுவதற்கோ, அல்லது வீட்டிலே நடக்கும் விசேஷத்திற்காக ஒன்றிரண்டு மரங்களை வெட்டுவதற்காக விண்ணப்பம் கொடுத்தால், கல்யாணம் முடிந்து ஆறு மாதத்திற்குப் பிறகுதான் உத்தரவு கிடைக்கிறது. ஏராளமான மரங்களை வெட்டி பத்து டன் அல்லது ஐம்பது டன் என்று லாரிகளில் லோடு செய்வதற்கு வியாபாரிகளுக்கு நிபந்தனை போட வேண்டியது அவசியம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், அங்கே உள்ள மக்களுடைய சொந்த செலவிற்காக குறைந்த அளவிலே ஐந்து டன் மரம் வெட்டுவதற்கு பஞ்சாயத்து தலைவரோ அல்லது பஞ்சாயத்து யூனியனோ அல்லது தாசில்தாரோ உத்தரவு போடலாம் என்ற நிலைமை ஏற்பட வேண்டும். ஒரு மரத்தை வெட்டுவது என்று சொன்னால் அது நன்றாக வளர்ந்த பிறகே, சுமார் பத்து வருடத்திற்கு பிறகுதான் வெட்ட முடியும். ஆகையால் ஒரு தடவை ஐந்து அல்லது பத்து மரங்களை வெட்டி விட்டால் அதே நபர் மறுபடியும் நாலைந்து வருஷங்களுக்கு விண்ணப்பம் செய்வதற்கு வசதி இல்லாமல் போய் விடும். ஆகவே, குடியானவர்களுடைய கஷ்டத்தை ஓரளவு குறைப்பதற்கு இந்த மாதிரி ஓரிரண்டு மரங்களை வெட்டுவதற்கான நிபந்தனைகளை தளர்த்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எத்தனை மரங்கள் வெட்டப்பட்டன என்ற கணக்கு ஜில்லா பாரஸ்ட் ஆபீஸருக்கு தெரியவேண்டுமென்றால் பஞ்சாயத்து போர்டு தலைவரோ அல்லது தாசில்தாரோ புள்ளிவிவரம் கொடுத்து விடலாம். ஆகவே, ஐந்து மரங்கள் வரை வெட்டுவதற்கு பஞ்சாயத்து போர்டு தலைவரோ அல்லது பஞ்சாயத்து யூனியனோ உத்தரவு கொடுக்கலாம் என்ற ஒரு ஷரத்தை இங்கு சேர்த்தால் மிகவும் நலமாயிருக்கும். அல்லது சர்க்கார் தனியாக இதற்கு ஒரு உத்தரவு போட்டாலும் போதும்.

15th November 1961] [Sri J. Matha Gowder]

இந்த நிலைமையிலே நம்முடைய மாகாணத்திலே காப்பி, தேயிலையை அதிகமாக உற்பத்தி செய்வதற்குத் தக்க பாதுகாப்பு அளிக்கவேண்டும். காப்பி தோட்டம் முன்பு எவ்வளவு ஏகரா இருந்தது, இப்பொழுது எவ்வளவு இருக்கிறது என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். காப்பிப் பயிர் இப்பொழுது எவ்வளவோ குறைந்துவிட்டது. மேலும் குறைந்துகொண்டே போகிறது. அதில் ஈடுபட்டிருப்பவர்கள் ஊக்கமில்லாமல் இருக்கிறார்கள். இந்த நிலைமையில்தான், காப்பி பயிர் அடியோடு அழிந்து போகக்கூடாது என்பதற்காகத்தான், இந்த சட்டத்தின் மூலமாக மக்களுக்கு ஊக்கம் அளித்து இருக்கிறோம். நான் குறிப்பிட்ட ஒருசில சிக்கல்களையும் நிவர்த்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த மசோதாவைக் கொண்டுவந்த அமைச்சர் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

* SRI N. MAHALINGAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, வனப் பாதுகாப்பு சம்பந்தமாக இருக்கக்கூடிய சட்டத்திற்கு இப்போது கொண்டுவந்துள்ள திருத்தத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஏற்கனவே சட்டம் கொண்டு வரப்பட்டபொழுது நமது மாகாணத்திலுள்ள காட்டு மரங்களை மிகவும் அதிகமாக அழிக்கிறார்கள் என்ற காரணத்திற்காகத்தான் இந்தப் பாதுகாப்பு சட்டம் கொண்டுவரப்பட்டது. சென்ற பத்து ஆண்டுகளிலே இந்த பாதுகாப்பு சட்டம் வந்த பிற்பாடு காடுகள் எவ்வளவோ அபிவிருத்தி அடைந்திருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆனால், நடைமுறையில் இருக்கக்கூடிய குறைகளைப் போக்குவதற்காக இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. புதிதாக காப்பித் தோட்டம், தேயிலைத் தோட்டத்தை உண்டுபண்ணலாம் என்று சொன்னாலும், ஏற்கெனவே இருக்கக்கூடிய தோட்டங்களிலே உள்ள மரங்களை வெட்ட வேண்டுமென்று சொன்னாலும், அதற்காக அனுமதி பெறுவதிலே சிரமம் இருக்கிறது. ஜில்லா கலெக்டர் அளவிலே, சர்க்கார் அளவிலே அனுமதி பெற வேண்டும் என்று இருப்பதினாலே இந்தத் தோட்டப் பயிர் செய்பவர்களுக்கு சிரமம் இருக்கிறது. ஆகவே, நடைமுறையிலுள்ள கஷ்டங்களை நீக்க வேண்டியது அவசியமென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஜில்லா கலெக்டருக்கோ அல்லது தாசில்தாருக்கோ இந்த அதிகாரத்தைக் கொடுப்பது மிகவும் பொருத்தமாக இருக்கும்.

காபி, தேயிலைத் தோட்டங்களைப் புதிதாக உண்டுபண்ணுவதற்காக மரங்களை வெட்டலாம், காடுகளை அழிக்கலாம் என்று திருத்தம் கொண்டுவருவது மட்டும் போதாது என்று நான் கருதுகிறேன். மலைப் பிராந்தியங்களில் ஏலம், வாழை போன்ற பல பொருள்கள் பயிரிடப்படுகின்றன. ஏலம், வாழை போன்ற இதர தோட்டங்களும் வைக்கக்கூடிய அளவுக்கு இந்தச் சட்டத்திலே ஏற்பாடு செய்யவேண்டும் என்பது என்னுடைய கருத்து. மலைப் பிராந்தியங்களில் உற்பத்தியாகக்கூடிய பொருள்களில் முக்கியமான பொருள் ஏலம். அதற்கும் இந்தச் சட்டத்தில் ஏற்பாடு

செய்யவேண்டியது அவசியம். கனம் அமைச்சர் அவர்கள் இதையும் முக்கியமாகக் கருத வேண்டும். சர்க்கார் கொடுத்திருக்கும் திருத்தங்களை ஆதரித்து என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன்.

*** SRI R. SRINIVASA IYER :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1955-ம் வருஷத்திய 17-வது சட்டத்திலே மலைப் பிரதேசங்களில் மரங்களை வெட்டாமலிருக்கும் பொருட்டு பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. அந்தச் சட்டத்தைத் திருத்துவதற்கு இப்பொழுது கொண்டுவரப்பட்டிருக்கும் மசோதாவைப் பற்றியும், இதைத் திருத்துவதற்குச் சர்க்காரால் கொடுக்கப்பட்டிருக்கும் புதிய திருத்தத்தின் மூலமாக முக்கியமான சில அதிகாரங்கள் சர்க்காருக்குக் கொடுக்கப்படுவதால் அதைப் பிரயோகப்படுத்துவதில் உள்ள சில விஷயங்களையும் பற்றி நான் சொல்ல விரும்புகிறேன்.

காபி, தேயிலை இரண்டும் அவசியம்தான். அவைகள் 'லக்ஷரி' என்று சொல்லலாம். அன்னியச் செலாவணி நமக்குக் கிடைப்பதற்காக அவற்றை அதிகமாக உற்பத்தி செய்ய வேண்டியதும் அவசியம்தான். காட்டுப் பிரதேசங்களினும் மலைப் பிராந்தியங்களிலும், இப்பொழுது நாம் கட்டியிருக்கும் நீர்த் தேக்கங்களுக்கு உதவியாக இருக்கக்கூடிய 'catchment area க்களிலும் இருக்கின்றன. நான் மூன்று வருஷங்களுக்கு முன்னுல் நேரில் பார்த்த ஒரு விஷயத்தை கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

நம்முடைய சட்டசபையின் எஸ்டிமேட் கமிட்டியின் சுற்றுப் பிரயாணத்தின்போது மாஞ்சோலை தேயிலை எஸ்டேட்டுக்கும் சென்றிருந்தது. மாஞ்சோலை தேயிலை எஸ்டேட் மணிமுத்தாறு அணைக்கு மேல் 'காட்ச்மென்ட் ஏரியா' வில் இருக்கிறது. குதிரைவெட்டி ஹில்ஸ் வரையில் 32 மைல் மலைப் பிரதேசத்தில் போகலாம். 8,400 அடி உயரம் வரை போகும்போது பார்த்தோம். 150 அடி, 200 அடி உயரம் இருக்கக்கூடிய, இரண்டு மூன்று பேர் கட்டி அணைக்க முடியாத பருமனுள்ள மரங்களில் கீழே பட்டையில் இரண்டு அடி அகலம் வெட்டிக்கொண்டிருந்தார்கள். மரங்கள் வெள்ளை வெள்ளையாகப் பட்டை உறிக்கப்பட்டிருந்தன. "என்ன இப்படி உறிக்கிறீர்களே!" என்று கேட்டதற்கு, "மரங்களை வெட்டக் கூடாதென்று சட்டம் இருக்கிறது, பட்டையை எடுத்து விட்டால் தானாகப் பட்டுப்போய்விடும், மூன்று நான்கு மாதங்கள் கழித்து கீழே விழுந்துவிடும்" என்று பதில் சொல்லப்பட்டது. கீழே விழுந்து பட்டுப்போன மரங்களையும் நாங்கள் பார்த்தோம். பிறகு, அதைப்பற்றி விசாரிக்க ஆரம்பித்ததில், அங்கு வந்திருந்த தாசில்தார், டெபுடி கலெக்டர் இவர்களிடமிருந்து சில விவரங்களைத் தெரிந்துகொண்டோம். இது ஆண்டிப்பட்டி ஜமீன்தார் அவர்களால் 1948-ம் வருஷத்திய 26-வது எஸ்டேட் அபாலிஷன் சட்டத்தை மீறி 1—7—1945-க்குப் பிறகு அதிகமான வருஷங்களுக்குக் குத்தகைக்கு விட்டுவிட்டார்கள். அதை அந்தச் சட்டத்தின் 20-வது செக்ஷன்படி அனுமதிக்காமல் இருக்கலாம்.

15th November 1961] [Sri R. Srinivasa Iyer]

ஆனால், போர்டு ஆப் ரெவினியூ அனுமதித்திருக்கிறார்கள். அதிலே கண்டிஷன் போட்டிருக்கிறார்கள். காபி, தேயிலைத் தோட்டங்கள் வைக்க வேண்டுமென்றால் மரங்களை வெட்டக் கூடாது என்றாலும், புதிதாக மரங்கள் வைத்து வெட்டலாம் என்று கண்டிஷன் போட்டிருக்கிறார்கள். 'வெட்டக் கூடாது' என்பதற்காக மரங்களைக் கோடரியால் வெட்டாமல் மரங்கள் தானாகப் பட்டுப்போகும் படியான வழிவகை செய்துகொண்டிருந்தார்கள். தேயிலை உற்பத்திச் செய்வதைப் பார்க்கவேண்டுமென்று அங்கு போனோம். நாங்கள் வழியில் பார்த்த விஷயம் அந்த எஸ்டேட் முதலாளிக்கு முன்னாடியே எட்டிவிட்டது. அங்கே போய்ப் பார்க்கும்போது, எண்ணெய் ஊற்றி உஷ்ணப்படுத்தவேண்டிய ஸ்டீம் பாய்லர் வைத்துக்கொண்டிருந்த அவர்கள் அங்கே ஏராள மான கட்டைகளைப் போட்டு எரித்துக்கொண்டு ஸ்டீம் பாய்லரை உஷ்ணப்படுத்திக்கொண்டிருந்தார்கள். எண்ணெய் போடக் கூடியதுதான் நியாயம். ஆனால், ஏராளமான விறகு எரிக்கப்பட்டு அந்த மெஷின் இயங்கிக்கொண்டிருந்தது. 'சாய்ந்து போன மரங்களை நாங்கள் உபயோகப்படுத்துகிறோம்' என்று அவர்கள் சொன்னார்கள். அதைப்பற்றி நாங்கள் ரிபோர்ட் எழுதியிருக் கிறோம். போர்ட் ஆப் ரெவினியூ அதைப் பார்த்ததில், 'ஏற்கனவே வைத்திருந்த கண்டிஷன் சரியானது' என்று சொன்னார்கள். எதற் காக இந்த உதாரணத்தை நான் சொல்கிறேன் என்றால், நாம் எந்த விதமான சட்டம் இயற்றினாலுங்கூட, அதை மீறி பூரா மரங்களை யும் வெட்டி அழிந்துவிடுவதைப் பார்க்கிறோம். அந்தக் குத்தகை தாரர் காபி, தேயிலைத் தோட்டங்களை அபிவிருத்தி செய்வதற்காக அந்த மரங்களை வெட்டவில்லை. மணிமுத்தாறு அணைக்கு மேலே இருப்பதைப்பற்றி தஞ்சை ஜில்லாக்காரர் பேசுகிறாரே என்று சிலர் நினைக்கலாம். நான் அங்கு போய்ப் பார்த்ததால் அதை ஒரு உதாரணமாகச் சொன்னேன்.

இன்றைக்கு மரங்களை நாம் பாதுகாக்கவில்லை. நீலகிரியில் இருக்கும் பெருவாரியான மரங்களை அனேகமாக வெட்டிவிட்டார் கள் என்பதற்காகத்தான் இந்தச் சட்டத்தைப் போட்டோம். இதன் ஷெட்யூலில் 'கூனூர் முனிசிபல் ஏரியா, கொடைக்கானல் முனிசிபல் ஏரியா, கோட்டகிரி பஞ்சாயத்து ஏரியா, உதகமண்ட் முனிசிபல் ஏரியா, ஏர்க்காட் பஞ்சாயத்து ஏரியா' என்று ஐந்து ஏரியாக்களுக்கு ஏற்படுத்தினோம். பின்னால் மலைப் பிரதேசங்களைப் பொருந்தும் கவர்ன்மென்ட் 'நோடிபை' செய்யலாம் என்று இருக் கிறது. இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கும் திருத்த மசோதா வில் கூட ஏர்க்காடு ஏரியாவைப்பற்றித் திருத்துவதற்கு ஆரம் பித்து, திருத்த மசோதாவின் 2-வது ஷரத்துக்கு சர்க்கார் திருத்தம் கொடுத்திருப்பதில் " .... such area in any hill station as the Government may, by notification, specify in this behalf" என்று இருக்கிறது. காபி, தேயிலை அவசியந்தான், அதற்கு மேல் உணவு உற்பத்தி செய்வதற்காகத் தண்ணீர் அவசியம். மரங்கள் அடர்ந்த ஏராளமான காடுகள் இல்லாவிட்டால் நமக்கு மழை குறைகிறது என்று விஞ்ஞானிகள்

சொல்கிறார்கள். அது ஒருவேளை மாறப்போகிறதோ என்னவோ எனக்குத் தெரியாது. ஆனால், இன்றைக்கு நீர்த் தேக்கங்களை ஏராளமாக நாம் ஏற்படுத்தியிருக்கிறோம். அவைகளுக்குத் தண்ணீர் வரவேண்டும். காட்ச்மெண்ட் ஏரியால் மழைபெய்ய வேண்டுமானால், அதற்கு அனுகூலமாக அங்கு மரங்கள் இருக்க வேண்டும். அந்த மரங்களை தாராளமாக வெட்டுவதற்கு அனுமதி கொடுத்துவிட்டால் உணவு உற்பத்தி பாதிக்கப்படும். ஜனப் பெருக்கத்திற்கு ஏற்றாற்போல்—உணவு உற்பத்தியை அதிகப்படுத்த நாம் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறோம். வருவாயைக் கணக்குப் பண்ணாமல், உணவு உற்பத்திக்காக கோடிக் கணக்கில் பணம் செலவழித்து நாம் அணைகள் கட்டுகிறோம். இந்த நிலையில் இந்த மரங்களை இப்படி வெட்டி அங்கு பாலைவனமாக ஆக்கிவிட லாமா என்பதை ஆலோசித்துச் செய்யவேண்டும் என்பதற்காகத் தான் இதைச் சொல்கிறேனேயொழிய, இந்த மசோதாவை நான் எதிர்க்கவில்லை. இதிலே அக்கறைப்பட்டவர்கள் அனேகம் பேர்கள் இருக்கிறார்கள். சர்க்காரும் அக்கறைப்பட்டவர்கள்தான். நானும் அக்கறைப் பட்டவன்தான். ஆனால், ஜாக்கிரதையாக இதிலே அதிகாரத்தைப் பிரயோகப்படுத்தவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

பழைய காபி, தேயிலை ப்ளாண்டேஷன்களைப் பொறுத்தவரை யில், மரங்களைக் கழிப்பதற்கோ மரங்களை வெட்டிவிட்டுப் புதிதாக மரங்களை வைப்பதற்கோ அனுமதி கொடுப்பதில் எந்தவிதமான ஆட்சேபணையும் இருக்க முடியாது. போகப் போக காபி, தேயிலை ப்ளாண்டேஷன்களை விஸ்தரித்துக் கொண்டு போனால் எவ்வளவு தூரம் நமக்கு மழை பெய்யக்கூடிய அளவு பாதிக்கப் படும் என்பதை ஆலோசிக்கவேண்டும். சென்னை மாநிலத்தில் 33 சத விகிதப் பரப்பில் காடு இருக்கவேண்டும் என்று சொல்லப்படு கிறது. ஆனால், இப்பொழுது 17 சத விகிதப் பரப்பில்தான் காடு இருக்கிறது. இந்த நிலையில் காடுகளை ஜாஸ்தியாக வளர்க்க வேண்டும். சாலையோரங்களில் மரங்கள் வளர்க்கவேண்டும். டெல்டாப் பிரதேசங்களில் கூட மரங்கள் வளர்க்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, இதில் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தை நல்ல முறையில், உணவு உற்பத்திக்குப் பாதகம் ஏற்படாத வகையில் பிரயோகிக்கவேண்டும் என்று மட்டும் சொல்லிக்காள்கிறேன். இந்த மசோதாவை நான் எதிர்ப்ப தாக யாரும் நினைக்கக்கூடாது. கைக்குத்தல் அரிசி சாப்பிட வேண்டும், தீட்டப்பட்ட அரிசி சாப்பிடுவது நல்லதல்ல என்றெல் லாம் சொல்கிறோம். மில்லிலே கூட 'பாலிஷ்' செய்யக்கூடாது என்று சொல்கிறோம். காபி, தேயிலை இல்லாமல் காலட்சேபம் செய்யலாம். ஆனால், உணவுத்தானியங்கள் இல்லாமல் காலட் சேபம் செய்ய முடியாது. உணவு தானியங்களை அதிகம் உற்பத்தி செய்வதற்கு நீர்ப்பாசன வசதி வேண்டும். ஆறுகளில் தண்ணீர் வந்து, அணைகளில் தேங்குவதற்கு மழை வேண்டும். மழை பெய் வதற்குக் காடுகள் அவசியம். அந்தக் காடுகளைக் காப்பாற்று

15th November 1961.] [Sri R. Srinivasa Iyer]

வதும் அவசியமாகிறது. காடுகள் இல்லாமல் ஏதும் செய்ய முடியாது என்பதை நாம் எச்சரிக்கையாக எடுத்துக்கொண்டு, சர்க்காரும் கலெக்டரும் மற்ற அதிகாரிகளும், மாஞ்சோலை எஸ்டேட்டில் செய்ததுபோல மற்ற இடங்களில் செய்ய இடங் கொடுக்காமல், இந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று நான் சொல்லி, என்னுடைய உரையை முடிக்கின்றேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் உதவி சபா நாயகர் அவர்களே வனங்களிலுள்ள மரங்களைப் பாதுகாக்க வேண்டியிருக்கும்போது அவைகளைப் பெருவாரியாக வெட்டி விற்றுப் பணம் ஆக்கிவிடலாம் என்ற கருத்து அதிகமாக இருந்த தால் அதற்கு இடம் கொடுக்கக்கூடாது என்பதற்காக இந்தச் சட்டம் முன்பு நிறைவேற்றப்பட்டது. ஆனால், இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும்போது சில சங்கடங்கள் இருக்கின்றன என்று அப்போதைக்கப்போது சொல்லப்பட்டு வந்தது. அவசியமாக, நியாயமாக உள்ள தேவையைக்கூடப் பூர்த்தி செய்து கொள் வதற்கு அனுமதி பெறுவதில் தாமதம் ஏற்படுகிறது என்றும் சொல்லப்பட்டது. ஜில்லா வன அதிகாரி அவர்களிடம் அனுமதி பெறுவது கஷ்டமாக இருக்கிறது என்று கோயமுத்தூர் ஜில்லா விலும் மற்றும் சில இடங்களிலும் சொன்னார்கள். இதற்கெல்லாம் சட்டத்தை மாற்றவேண்டிய அவசியம் இல்லை. தாசில்தாரிடம்கூட அனுமதி பெறலாம் என்ற வகையில் இதில் மாற்றம் செய்திருக் கிறோம்.

இப்பொழுது பேசிய கனம் அங்கத்தினர் திரு. மாதா கௌடர் அவர்கள், இந்த அதிகாரத்தைப் பஞ்சாயத்துத் தலைவருக்குக் கொடுத்து விடலாம் என்று சொன்னார்கள். அப்படிச் செய்தால் கிராமப் பஞ்சாயத்துத் தலைவருக்குத் தொந்தரவு வரும், தாட் சண்யம் வரும். நிர்த்தாட்சண்யமாகச் செய்தால் அவருக்குக் கஷ்டமாக இருக்கும். ஒருகால் பஞ்சாயத்து யூனியன் தலைவருக்கு இந்த அதிகாரத்தைக் கொடுக்கலாமா என்பதை யோசிக்கலாம். பஞ்சாயத்துத் தலைவருக்கு இந்த அதிகாரத்தைக் கொடுப்பது சரியல்ல என்றுதான் நான் நினைக்கிறேன். தாசில்தாருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது, சிலவிடங்களில் ரெவின்யூ இன்ஸ்பெக் டருக்குக் கூட அளிக்கத் தயார் என்று சொல்லியிருக்கிறேன். அதில் இருக்கக்கூடிய கஷ்டங்களைப் பார்த்து, அவர்களுக்குரிய கஷ்டங்களைப் பார்த்து அந்தவகையில் இதைத் தீட்டலாம். இதனால் டீ காபி, எஸ்டேட் பாதுகாக்கப்படவேண்டியதுதான். கனம் மகாலிங்கம் அவர்கள் ஏலம் பயிரிடுவது, வாழை பயிரிடுவது பற்றிச் சொன்னார்கள். வாழை வேண்டியதுதான். வனத்தை அழித்துப் போடவேண்டுமா என்பது கவனிக்கப்படவேண்டும். ஏலம் போடுவதற்குக் காடுகளை வெட்ட வேண்டிய அவசியம் இல்லை. காடுகளிலேயே அது பயிராகிறது. ஓரளவு மரங்களை வெட்ட வேண்டும் என்கிறார்கள். அதையும் பரிசீலனை செய்யலாம்.

காபி, டீ பயிரிடுகிறவர்கள் தங்கள் கஷ்டங்களை எடுத்துச் சொன்னார்கள். கலெக்டர்கள் அவருடைய கஷ்டத்தை நீக்க வேண்டுமென்றாலும் கூட சட்டத்தில் இடமில்லை. காபி போர்டு தலைவரும் என்னிடம் அதைப்பற்றிச் சொன்னார். அதற்காகத் தான் இந்தத் திருத்த மசோதா வந்திருக்கிறது. இன்றைக்கு காபி, டீ மட்டும் சாப்பிட்டுவிட்டு இருக்கிறவர்கள் கூட இருக் கிறார்கள். ஆகவே இதை லக்ஷரி என்று சொல்லிக்விட முடியாது. உணவுப்பொருள் விஷயத்திலும் நமக்கு அக்கறையுண்டு. இதனால் மலைப்பிரதேசங்களிலுள்ள வனங்களை அழித்துவிட வேண்டும் என்பதும் நம் நோக்கம் அல்ல. ஆகவே பொதுவாக இந்த மசோதாவை எல்லா அங்கத்தினர்களும் வரவேற்றது குறித்து என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Hill Stations (Preservation of Trees) Amendment Bill, 1961 (L.A. Bill No. 53 of 1961), be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

*Clause 2.*

DEPUTY SPEAKER : The question is—

'That clause 2 do stand part of the Bill.'

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move the following amendment :—

'for item (i), *substitute* the following :—

"(i) in sub-section (1), for clause (*c*) of the proviso, the following clauses shall be substituted, namely :—

(*c*) the tree is to be cut for the improvement of coffee crop in any coffee plantation in such area in any hill station as the Government may, by notification, specify in this behalf; or

(*d*) the tree has silviculturally matured ".'

இதைப்பற்றிக்கூட இதற்கு முன் பேசிய அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். இந்த அதிகாரம் அரசாங்கத்திற்கு இருப்பது நலம். ஆகவேதான் காபி, டீ பயிருக்குக் குந்தகம் இருக்கக் கூடாது என்ற நோக்கத்துடன் இதைப் பிரேரேபிக்கிறேன்.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

* SRI R. SRINIVASA IYER : Mr. Deputy Speaker, Sir, the amendment proposed by the Hon. Minister is far better and a great improvement on the existing provision of the Bill.

Section 3 of the main Act reads as follows :—

'No person shall, without the previous permission in writing of the Collector cut, uproof or burn, or cause to be cut, uprooted or burnt, any trees ".

15th November 1961] [Sri R. Srinivasa Iyer]

Provided that such permission shall not be refused if—
(*a*) the tree constitutes a danger to life or property; or
(*b*) the tree is dead, diseased or wind-fallen; or
(*c*) the tree has silviculturally matured; . . .'

Now we are substituting a new clause for the existing clause (*c*) and it reads as follows:—

'the tree is to be cut for the improvement of coffee crop in any coffee plantation in such area in any hill station as the Government may, by notification, specify in this behalf; . . .'

The proposed clause in the Bill says—

'the tree is to be cut in any coffee plantation in Yercaud Panchayat area for the improvement of coffee crop.'

The amendment proposed is a better draft and a better wording and it gives the Government control over the orders of the Collector and also over the notification of an area in any hill station. As I stated already, when the Collector gives permission, he may consider all the points and whether the cutting of the trees as such is necessary not only for the improvement of the coffee crop but also for the cultivation of new coffee crop.

The amendment was put and carried.

Clause 2 as amended was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, I move—

'That the Madras Hill Stations (Peservation of Trees) Amendment Bill, 1961 (L.A. Bill No. 53 of 1961), as amended be passed.'

DEPUTY SPEAKER: The question is—

'That the Madras Hill Stations (Preservation of Trees) Amendment Bill, 1961 (L.A. Bill No. 53 of 1961), as amended be passed.'

The motion was put and carried and the Bill as amended was passed.

## (3) THE MADRAS CATERING ESTABLISHMENTS (AMENDMENT) BILL, 1961 (L.A. BILL NO. 40 OF 1961).

* THE HON. SRI M. BHAKTAVASALAM: Mr. Deputy Speaker, Sir, I move—

'That the Madras Catering Establishments (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 40 of 1961) be taken into consideration.

Sir, according to sub-section (2) of section 11 of the Madras Catering Establishments Act, 1958, every employee shall be allowed ineach calendar year a holiday of one whole day on the 26th January and the 15th August and five holidays each of one whole day for each festival as the Inspector may, in consultation with the employer and employees, specify.